## பதிப்புரை

சீர்காழி—அருணாசலக் கவிராயர், தியாகராஜ சுவாமி களைப் போலவே இராமனைப் பாடினார். கவிராயர் பாடிய இராம நாடகக் கீர்த்தனங்கள் சிறந்த இசை யிலக்கியச் செல்வ மாகும்.

இதை எழுதிய யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் இக்கவிராயர் வரலாற்றையும் வாக்கின் நயத்தையும் இக் குறுஞ்சுவடியில் திட்பநுட்பமாக விளக்குகிறார். தமிழர் தமிழ்ப் பெரியாரை அறிய இத்தகைய குறுஞ்சுவடிகள் பயன்படும். எந்தாய் வாழ்க!

அன்பு நிலயத்தார்.

இராமச்சந்திரபுரம்
15—5—1945

அகூ—கூ—கூ



# பொருளடக்கம்

இசைச் செல்வர்

# அருணசலக் கவிராயர்

## க. கவிராயர் வரலாறு

### 1. நண்பர் விளையாட்டு

இரவு சுமார் ஒரு மணி; இராமாயண காலக்ஷேபம் முடிந்தது; இரண்டு மணிக்கே சேஷ பாகவதர் தலை சாய்த்தார். சூரியன் வந்து காப்பி சாப்பிட எழுப்பினன்; நித்திராதேவி அவரை விடவில்லை. ஜலதரங்கம் சுப்பையர், "தூங்கினன், தூங்கினனே கும்பகர்ணன்" என்று முக வாய்க்கட்டையைத் தடவுகிறார். "அட சீ, எதிரிலே கண்டு சினமிகப் பொங்குதடா" என்று விழுந்து, மறுபடி கண் மூடுகிறார் பாகவதர். பஞ்சாபிகேச பாகவதர், "என் பள்ளி கொண்டீரையா?" பாடுகிறார். "சை, அரக்கியர் என்கிற புலிக்கூட்ட நடுவிலே" என்று சேஷர் தலைதூக்கி எழுந்து சுப்பையரை முறைத்துப் பார்க்கிறார். "எனது வலது கைக்குத் தினவு தின்குதடா" என்று பாய்ந்து, செல்ல அடி கொடுக்கிறார். மாங்குடி பாகவதர் "பாய்ந்தானே ஹனுமான்" என்று கை தட்டுகிறார். "அடிக்காமல், என் கோபம் முடிக்காமல் போவேனோ?" என்று சேஷண்ணு ஒரு தாண்டுகால் போடுகிறார். "அடடா, வெளியே புறப்படடா" என்று பஞ்சாபி எல்லாரையும் அழைத்துக்கொண்டு காப்பி உபாசனைக்குச் செல்லுகிறார்.

அருணாசலக் கவிராயர் கீர்த்தனங்கள் ஆடல், பாடல் கதைக்கு மட்டுமன்று; நண்பர் நகையாட்டுக்கும் இப்படிப் பயன்பட்டது! "ஐயா, நானொரு பெண் பிறந்த கதை" வீட்டுக்கு வீடு முழங்குகிறது. தமிழர் வாழ்வுடன் ஐக்கிய மான பாடல்களில் இராமாயணக் கீர்த்தனம் முதன்மை யானது. அதன் ஒவ்வொரு வரியும் ஒப்பற்ற இசைச் சித்திரம். அருளும் பொருளும் அழகும் ஆனந்தத் தாண் டவமாடும் கீர்த்தனைகளை நமக்கு அளித்த அருணாசலக் கவிராயர் வரலாற்றைத் தமிழர் அறிக.

## 2. சிவஞான தேசிகர்

தருமபுரம் ஆதீனம், பெயருக்குத் தக்கபடியே தரும ஜோதியாக விளங்குகிறது. அது தமிழுக்கும் வேதாக மங்களுக்கும் செய்துள்ள நன்மை அளவற்றது. இங்கே ஆட்சி செய்த ஒவ்வொரு பண்டார சந்நிதிகளும் தமிழுக் கும் சைவத்திற்கும் பொதுநலப் புண்ணியங்கள் செய்து புகழ் பெற்றிருக்கின்றனர். இந்த ஆதீன பீடத்திற் புகழ் பெற்று விளங்கிய குருமாருள் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் ஒருவர். அவர் எத்தனையோ மாணவருக்குக் கல்வியும் சமயஞானமும் அளித்தார். ஏழை, அநாதை என்று யார் வந்தாலும் அவர் தந்தைபோலப் பரிந்து போற்றினர். மெய்கண்டார் குருபூசை சிறப்பாக நடந்த ஒரு நாள், பண்டார சந்நிதிகள் அடியார்களுக்குப் "பசுத்துவமும் சிவத்துவமும்" என்பதைப்பற்றி அருமையாகப் பேசினர். எத்தனையோ வித்துவான்கள் அவர் சொல்லமுதைப் பருகினர். கூட்டத்தை இடித்துத் தள்ளிக்கொண்டு ஒரு சிறு பையன் வந்தான்; கையைக் கட்டிக்கொண்டு வணக்க மாகச் சந்நிதானத்தின் பார்வை படும்படியாக நின்று சொற்பொழிவைப் பருகினன்; கண்ணீர் வடித்தான். பிரசங்கம் முடிந்தது. சந்நிதானம் எழுந்தபோது, இச்சிறு வன் அவர் காலில் விழுந்து வணங்கி நின்றான். பரம

ஞானியான பெரியார், இச்சிறுவனின் பரிபக்குவத்தை உணர்ந்தார். "தம்பீ, நீ யார்? எந்த ஊர்? ஏன் கண்ணீர் விடுகிறாய்? என்ன தேவை?" என்று ஆதரவாகக் கேட்டார்! பையன் தன் கதையைச் சொன்னான்:

## 3. அருணசலம்

"குருதேவா, வணக்கம்; என் ஊர் தில்லையாடி; எந்தை நல்லதம்பிப் பிள்ளை; எந்தாய் வள்ளியம்மை; தந்தை சமணம் விட்டுச் சைவரான அன்பர்; அவருக்கு நான்கு புதல்வர் பிறந்தனர். நானே நான்காம் பிள்ளை; பெற்றோர் என்னை ஐந்து வயதிலேயே படிக்க வைத்தார்கள். நான் எண்ணெழுத்துக் கற்றேன்; எடுத்த நூலைப் படிப்பேன். என் பெற்றோர் இறந்து போனார்கள். நான் தமயன்மார் பாதுகாப்பில் சிலநாள் இருந்தேன்; வீடு பிடிக்கவில்லை. கல்வியே எனது தேவை! ஞானப்பசி கொண்டு ஞான ஊற்றைச் சரண் புகுந்தேன். என்னைச் சந்நிதானம் பாது காத்தருள வேண்டும்; என் பெயர் அருணசலம்" என்றான் சிறுவன்.

எட்டுவயதுப் பையனுடைய கள்ளமற்ற உள்ளத்தை முனிவர் கண்டு மகிழ்ந்து பரிவு கொண்டார்: "சரி, இரு இங்கே; படித்து முன்னுக்கு வா; சிவன் உன்னைக் காப்பார்" என்று ஆசீர்வதித்து, ஏற்று, பையனை அம்பல வாணக் கவிராயரிடம் ஒப்பித்தார் மகான்.

## 4. புலவன்

அருணசலம், நன்னூல், நிகண்டு, சங்க நூல்கள், சைவ நூல்கள், பெரிய புராணம் அனைத்தையும் அள்ளிப் பருகினான்; தமிழுடன் வடமொழியும் கற்று ஆகம சாத்திரங்களிலும் தேர்ந்தான். மாணவன் அருணசலம், அருண சலப் புலவரானான்! பேச்சு, எழுத்து, படிப்பு, சிந்தனை, ஒழுக்கம், அடக்கம் அனைத்திலும் உயர்ந்தநிலை பெற்றான்;

தருமபுரப் புத்தகசாலை முழுதையும் மூளையில் ஏற்றிக் கொண்டான். எனினும், அவன் தன் வாழ்விற்கு வழி காட்டியாகக் கொண்ட நூல்கள் இரண்டே—திருக்குறள், கம்ப ராமாயணம். ஒன்று வாழ்வின் இலக்கணம்; மற்றொன்று இலக்கியம்.

## 5. இல்லறமே இன்பம்!

சிவஞான தேசிகர் சின்னப்பட்டத்திற்கு ஓர் அறிவாளியைத் தேர்ந்தெடுக்க முயன்றார். அவர் நினைப்பில் அருணாசலமே எழுந்தான். "அருணாசலம், நீ கல்வி ஒழுக்கத்தில் உயர்ந்தநிலை பெற்றிருக்கிறாய். நமது பீடத்திற்கு நீயே தக்கவன்; சம்மதமா?" என்று கேட்டார் குரு. அருணாசலம், "நான் வள்ளுவர் வழியே வாழ விரும்புகிறேன்; அவர் இல்லறஞ் சொல்லியே, துறவறங் காட்டுகிறார். அடியேனும் இல்லறமாகிய நல்லறத்தை விரும்புகிறேன். இல்லறமே இன்பம்; ஆசி தருக!" என்றான். தேசிகர் ஆசி கூறி, அருணாசலத்தை இல்லற வாழ்விற்கு அனுப்பினார்.

## 6. கம்பனே தங்கக் கவி!

அருணாசலம் தில்லையாடிக்கு வந்து குறளையும் கம்பனையும் மீண்டும் மீண்டும் ஆராய்ந்தான்; மற்ற நூல்களுடன் ஒப்பிட்டு, 'அவை சுரங்கத்தங்கம், இவை சொக்கத்தங்கம்' என்று மெச்சினான்: கம்பனை வரிப்பிளந்து ஆராய்ந்து பாடம் பண்ணினான்; கம்பனே தன்னுட் புகுந்து கவி மேகமாக நிறைந்ததுபோல் உணர்ந்தான். மேகம், கவி பொழியத் தொடங்கியது; கேட்டவர், "அருணாசலக் கவிராயரே, தங்கள் தமிழ் கம்பன்தமிழ்!" என்று மெச்சினர்.

## 7. மாப்பிள்ளை

இவ்வாறு முப்பது வயதுவரையில் கவிராயர் தூய பிரமசாரியாகக் கல்வி வளர்த்தார்; தாம் கற்றதைப் பிறருக்குச் சொல்லுவதில் விருப்பங்கொண்டார்; ஒருநாள் கருப்

பூரில் இவர் "சீதாகல்யாணம்" படித்து விளக்கினர்; அதைக் கேட்டவருள் மீனட்சி ஒருவள்; அழகிளங் கன்னி; முத்துக்குமாரசாமிப் பிள்ளை மகள். பிள்ளை நல்ல செல்வர்; அறிவாளி. மகள் தன் விருப்பத்தைத் தாயிடம் சொன்னள்; தாய் கணவனிடம் சொன்னள். பிள்ளை, கவிராயரை "வாரும் மாப்பிள்ளை" என்று உபசரித்தார். மனம் இனம் இரண்டும் பொருந்தின; திருமணம் நடந்தது. வள்ளுவருக்கு வாசுகிபோல் கவிராயருக்கு மனைவி மீனட்சி வாய்த்தாள். புலவர், அவள் அறிவும் அன்பும் பெருக நடந்தார். இல்லறம் இன்பமளித்தது!

## 8. காசுக் கடை

கவிராயர் உழைப்பாளி; அவர் பிறரைச் சாராமல் தொழில் செய்துண்ணக் கருதினர். அவருக்குப் புதுச்சேரியில் சில நண்பருண்டு. அவருள் துய்ப்ளேயின் துபாஷாகப் புகழ்பெற்ற ஆனந்த ரங்கப்பிள்ளை ஒருவர். அவருடைய அன்பிற்குரிய குருவப்ப பிள்ளை, "கவிராயரே, பணக்காரரைப் பாடிப் பிழைக்காதேயும்; காசுக் கடை நடத்தும்; தங்கம் வெள்ளி இங்கிருந்து வரும்" என்றார். கவிராயர் காசுக்கடை முதலாளியானர்; அதிலும் கொழுத்த லாபந்தான். கடையில் ஆள் வைத்து வேலை வாங்கியதால், இவரது அறிவு வளர்ச்சிக்குப் போதிய நேரங் கிடைத்தது.

## 9. ஆராய்ச்சி

சிந்தாமணி, சூளாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, நைடதம், கந்தபுராணம், பெரிய புராணம்—ஆகிய நூல்களையெல்லாம் கவிராயர் முறையாகப் படித்துக் கம்பனுடன் எடைபோட்டுப் பார்த்தார். கம்பனுக்கிணையில்லை; வள்ளுவருக்கு நிகரில்லை; ஆதலால் முடிவில் உறை

கல்வில் அதிக மாற்றுளிரும் இரண்டையும் பாடம் பண்ணினர். ஆனல் கம்பனைப் பொதுஜனங்கள் எளிதில் அறிய முடியாது. எளிய இனிய இசைப்பாடல்களாகச் செய்தால், பண்டிதர் பாமரர் அனைவருக்கும் அவை பயனுறும் என்று புலவர் கருதினர். கம்பனையே ஆர்வமுடன் பிரசங்கம் செய்துவந்தார், நமது புலவர்.

## 10. சீர்காழியில்

கவிராயர் அடிக்கடி தங்கம் வெள்ளி வாங்கப் புதுச்சேரிக்குச் செல்வதுண்டு. ஒருதரம் வழியில், சீர்காழி தருமபுர மடத்தில் அவர் தங்கினர். மடத்தில் அப்போது கட்டளைத் தம்பிரானுக இருந்தவர், தம்முடன் படித்த சிதம்பரம் பிள்ளை ஆவர். இருவரும் நட்புரிமையுடன் அளவளாவினர். தம்பிரான் பாடிய கட்டளைமாலையைப் புலவர் மெச்சினர்; தம்பிரான் சீர்காழியில் சீர்காழிப் பள்ளுப் பாடப் பீடிகை போட்டிருந்தார். பல வேலைகளால் நூல் மேலே ஓடவில்லை. அவர், “ அருணாசலமே, இந்தப் பள்ளைப்பாடி முடிக்கவேண்டும் ” என்றார். நமது கவிராயர் ஒரே இரவில் நூலை முடித்துக் காலையில் ஓர் அடியார் மூலம் தம்பிரானுக்கு அனுப்பி, அவசரமாகப் புதுவை சென்றார். தம்பிரான், பள்ளின் தெள்ளிய நடையும் ஆழ்ந்த பொருளுங் கண்டு வியந்து, கவிராயரைத் தம்முடனேயே வைத்துக்கொள்ள விரும்பி, ஒரு பெரிய வீட்டைத் தயார்செய்து தில்லையாடிக்குச் செய்தி யனுப்பினர். தம்பிரானைக் குடும்பத்திற்கும் தெரியும். ‘கவிராயர் இங்கேயே தங்கியிருக்கப் போகிறார்; குடும்பத்துடன் வருக’ என்பதை அறிந்த மீனாட்சி, நாயகன் கட்டளையென மதித்து, உடனே குடும்பத்தைச் சீர்காழிக்குத் தூக்கினள்; தம்பிரான் அழகான வீட்டில் அவர்களை வைத்து வேண்டிய சௌகரியங்களைச் செய்தார்.

## 11. “உள்ளே கேளும்”

புதுவையிலிருந்து கவிராயர் திரும்பி வரும்போது சீர்காழி மடத்திலேயே தங்கினர். கட்டளைத் தம்பிரான், “அருணசலம், ஓர் அன்பர் வீட்டிற்குச் செல்வோம்” என்று கவியை உடன் அழைத்துக்கொண்டு ஒரு புதிய வீட்டில் நுழைந்தார். உள்ளிருந்து, “வாருங்கள்” என்ற மணிக்குரல் கேட்டது! மீனாட்சி புன்னகை குலுங்கக் கணவனை வரவேற்றாள். கவிராயர், “எப்படி இவர்கள் இங்கே வந்தார்கள்?” என்று வியந்து வினவினர்! “எல்லாம் உள்ளே கேளும்!” என்றார் தம்பிரான், மனைவி தம்பிரான் அன்பையும், பெருந்தன்மைகளையும் சொல்லி, “நாம் இங்கேயே இனி இருப்போம்!” என்றாள். தம்பிரானுக்கு விருந்து செய்து, கவிராயர் நன்றி தெரிவித்தார்.

## 12. சீர்காழிக் கவிராயர்

தில்லையாடி அருணசலம், சீர்காழிக் கவிராயரானர். ஞானசம்பந்தர் பிறந்த அத்திருத்தலத்தில், கவிராயர் நாவில் தமிழிசைப்பால் ஊறியது. தம்பிரான் கவிராயரைக்கொண்டு பல அரிய நூல்களை ஆக்குவித்தார்; இவர் தனிக்கவிகள், அஜோமுகி நாடகம், சீர்காழித் தலபுராணம், சீர்காழிக் கோவை, அனுமார் பிள்ளைத் தமிழ் முதலிய பல நூல்களைச் செய்து, இனிமையாகப் படித்துக் காட்டினர்!

## 13. இராமாயணக் கீர்த்தனங்கள்

புலவர், கம்ப ராமாயணமும் பாடஞ் சொன்னர். அதைக் கருத்துடன் கேட்டவருள் சட்டநாதபுரம் இசைப் புலவர்களான வேங்கடராம ஐயர், கோதண்டராம ஐயர் ஆகிய இருவரும் கவிராயரின் பேரன்பரானர்கள். அவர்கள், “ஐயா, தங்கள் பெயர் என்றும் நிலைக்கும்

படி கம்ப ராமாயணத்தைக் கீர்த்தனங்களாகப் பாடினால் நல்லது" என்றனர். "கம்பர் விருத்தம் பாடினார். பால பாரதி என்பவர் சந்த விருத்தம் பாடினார்; நான் கீர்த்தனை பாடுவதே நலம்" என்று கவிராயர் தம் அறுபதாம் வயதில் எழுத்தாணி நாட்டினார். கவிராயர் பாடப்பாட இசைப்புலவர் இருவரும் தக்க இராக தாளங்களை அமைத்து இசைத்தனர்; தமது கச்சேரிகளில் முழுதும் கவிராயர் பாடல்களையே பொழிந்தனர்; சென்னை, தஞ்சை, புதுவை முதலிய இடங்களில் பாடி நல்ல சன்மானமும் பெற்றனர். இராமாயணக் கீர்த்தனங்கள் அதி விரைவில் நாடெங்கும் பரவி முழங்கின. இராம நாடகக் கீர்த்தனங்களைக் கேட்ட தமிழர், "கம்பனே மறுபடி வந்து தனது கவிதையை இசைநூலாக்கினான்!" என்று புகழ்ந்தனர்! கம்பத் தெளிவே இராம நாடகக் கீர்த்தனை. கம்பன் வாக்குகளையே இதிற் காணலாம்.

கம்ப ராமாயாணம் போலவே ஸ்ரீரங்கத்தில் தமது கீர்த்தனையை அரங்கேற்ற விரும்பினார் கவிராயர். ஸ்ரீரங்கம் சென்று சந்நிதியில், "என் பள்ளிகொண்டீர் ஐயா-ஸ்ரீரங்க நாதரே?" என்ற மோகன ராகக் கீர்த்தனத்தை மன முருகிப் பாடினார்; பிறகு திருவருள் ஆணைப்படி ஆழ்வார்களையும் பாடினார். "கவிராயரே, பெருமாள் கனவில் உத்தரவிட்டார். இனி, உமது நூல் அரங்கேறலாம்" என்றனர் கோயில் அதிகாரிகள். பங்குனி அத்த நாளில், கம்பன் இராமாயணத்தை அரங்கேற்றிய அந்த மண்டபத்திலேயே அருணாசலக் கவிராயர் தமது இராமாயணத்தையும் அரங்கேற்றினார். அவருடன் கீர்த்தனங்களை இரண்டு அன்பு வித்வான்களும் இனிது பாடினார்கள். சபை பேரின்பச் சிலிர்ப்படைந்தது! கவிராயருக்குச் சிறப்பும் சன்மானமும் பொழிந்தன. அன்றுமுதல் முதிய கவிராயர் ஊர் ஊராகச் சென்று கீர்த்தனம் பாடினார்.

## 14. ஹனுமான் விஜயம்

அக்காலம் தமிழகத்தில் சோழபாண்டியர் அரசு மறைந்து நாயக்கர் அரசு வந்து, அதுவும் ஒழிந்து, நவாபும் மராட்டியரும் கொடிபோட்டனர். இடையே ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் போட்டா போட்டிகளும் வெட்டுச் சண்டைகளும் நடந்தன. பிரெஞ்சுக்காரர் கை மேலோங்கி யிருந்தது. துய்ப்ளே நாடெங்கும் செல்வாக்குப்பெற்று அசல் நவாபாயிருந்தான். அவன் வலது கை, ஆனந்தரங்கம் பிள்ளை என்னும் சிறந்த ராஜதந்திரி. ஆனந்தரங்கம் பிள்ளை, துபாஷாகவும், துய்ப்ளேயின் மந்திரியாகவும் இருந்து, சீரும் செல்வமும், செல்வாக்கும் பெற்றுச் செழித்தோங்கினார். அவர் கலாரசிகர்; பக்திரசமான பாடல்களைக் கேட்டால், மெய்மறந்து போவார்; கவிகளுக்கு வரையில்லாமல் பொன் அளிப்பார்; ஒரு தரம் பசியாக வந்த ஒரு கவிக்கு வெள்ளி இலை நிரம்பப் பணங் குவித்துத் தந்தார்.

ஒரு சமயம் அருணாசலக் கவிராயர் புதுச்சேரிக்கு வந்து, ஆனந்தரங்கம் பிள்ளைக்கு ஒரு சீட்டுக்கவியனுப்பிக் காத்திருந்தார். அச்சமயம் தஞ்சாவூரிலிருந்து துளஸிமன்னர் அவசரமான தூதனுப்பி, "மதார் முல்மல்க் என் கோட்டையை வளைத்துக்கொண்டான்; தாங்கள் சேனையை உதவிக்கு அனுப்பவேண்டும்" என்று உதவி வேண்டினார். அச்சமயம் கவிராயரும் பேட்டி வேண்டினார். ஆனந்தரங்கம் பிள்ளை கவிராயரை அழைத்தார். கவிராயர் தம்பூராவைத் தூக்கிக்கொண்டு ஒரு தரு பாடிக் கொண்டே தோன்றினார்!

ஆனந்தரங்கம் பிள்ளை :—கவிராயரே! உமது இராமாயணத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். நாடு போர்க் களமா யிருக்கிறது. அதை வீரப்படுத்த உமது பாட்டு உதவுமா?

அருணாசலம் :—எனது உபாசனாதெய்வமான ஹனுமான் செய்த போரைக் கேட்டால், அலிக்கும் ஆண்மை யுண்டாகுமே!

ஆனந்தரங்கம் :—எங்கே? இந்தத் தூதருக்கு வீரந் துள்ளும்படி ஒரு கீர்த்தனம் நடக்கட்டும் பார்ப்போம்!

"ஆஹா!" என்றார் கவிராயர் ஆவேசமாக! "பாய்ந் தானே ஹனுமான்!" என்று நாதநாமக்கிரியையில் பிர்கா இழுத்து, பாய்ந்து பாய்ந்து பாடினார்! உடன் பாடிய இசைப் புலவர்களும் உருக்கமாகப் பொருள் விளங்கும்படி இசைத்தனர்.

"மோச நிசாசரர் நாசம தாய்விட
வீசிய வால் எம பாசம தாகப் (பாய்ந்தானே !...)"

என்று கவிராயர் முன்னாலே ஒரு தாவுத் தாவினார். "சபாஷ்! சபாஷ்! இதுவே பாட்டு...!" என்று ஆனந்த ரங்கம் பிள்ளை கைநிரம்பப் பொன்னளித்துத் தஞ்சைத் தூதரிடம் பின்வருமாறு சொன்னார் :

"துளஸிக்கு நான் ஒரு படை தருகிறேன். அதை விட உங்களை ஆவேசப்படுத்தி வெற்றிபெறச் செய்யும் இந்தத் தமிழிசைவாணரைத் தருகிறேன். இவரைக் கொண்டு, ஹனுமான் கதை செய்யச் சொல்லி, சேனை வீரரைப் பக்தியுடன் கேட்கச் செய்யும்....கவிராயரே. தஞ்சையை நோக்கி ஹனுமான் வேகத்துடன் பாயும்!"

கவிராயர் வெங்கன்னாவுடன் தஞ்சை சென்றார்.

நவாப் மதார் முல்மல்கின் சேனை வெண்ணாற்றங் கரைக்கு அப்புறம் பாய்ச்சலில் நிற்கிறது. வெங்கன்னா புதுவைப் படையுடன் கவிராயரையும் துளஸி மன்னன் சமுகத்திற்கு அழைத்து வந்தார். துளஸி சேனையைக்

மகிழ்ந்து கண்டு "இவரும் போர்வீரரா?" என்ருர். வெங்கன்ன, "இவர் வாக்கில் ஹனுமான் இருக்கிருன்; அவன் பாய்ந்தெழுந்தால், நமது காரியம் ஜயம்! இவரது இராமாயணக் கீர்த்தனங்களைக் கேட்டால், நமது படைக்குப் புதிய பலம் வரும்" என்ருன். "சரி, நடக்கட்டும்" என்று துளஸி இடங்குறித்துத் தானும் வந்தான்.

* * *

தஞ்சை அரண்மனை சங்கீத மஹால், தோரணங்களுடன் அலங்கரிக்கப் பெற்றிருக்கிறது. மராட்டியர் "ரகுபதி ராகவ ராஜாராம்" பாடுகின்றனர். வீரர் இராமாயணக் கீர்த்தனம் கேட்க ஆவலாகக் காத்திருக்கின்றனர். பக்க வாத்தியங்களும் பின் பாடகரும் கச்சிதம். அருணசலக் கவிராயர், ஹனுமான் விஜயம் என்ற பொருளைக்கொண்டு, சமுஸ்கிரத சுலோகங்களும் இடையிடையே சொல்லி, தமது கீர்த்தனங்களைக் கம்பீரத்வனியில் பாடினர். "பாய்ந்தானே ஹனுமான்" வரும்போது, துளஸி பாய்ந்து வந்து கவிராயருக்கு ஓர் இரத்ன ஹாரம் தந்தான்.

> "இந்த ராவணனைக் கண்டும் சும்மா போனல்
> என்ன ஹனுமான் நானே"

என்ற அடாண கீர்த்தனம் பாடும்போது வீரர்கள் மீசையை முறுக்கிக்கொண்டனர்.

> "அடிக்காமலும் கைகளை ஒடிக்காமலும் நெஞ்சிலே
> இடிக்காமலும் என்கோபம் முடிக்காமலும் போவேன ?"

என்றபோது சபை, சடசடவென்று கைதட்டியது. "இராமசாமி தூதன் நானடா அடடா ராவண" என்ற மோகனராகக் கீர்த்தனத்தில் "காலமும் பலமும் தெரியாமல் குதிக்கிருய்!" என்னும் போது ஏகக் கரகோஷம்! தமிழ்த் தெரியாத மராட்டியர்களும் ரசித்து "வாஹ்வா!"

என்றனர். அனுமான் இலங்கையை அழித்து இராமனிடம் வந்து சூடாமணி தருகிற மட்டும் கதை நடந்தது. துளஸி, "கவிராயரே, நீர் ஐந்துநாள் திருவையாற்றிலிருந்து பின்னர் வாரும்" என்ருர். மறுநாள் கடும்போர்; தஞ்சைச் சேனை "பாய்ந்தானே ஹனுமான்!" என்று முணுமுணுத்துக்கொண்டே போர்க்களத்தில் சண்ட மின்னல் போலத் தாவி, எதிரியைப் புடைத்து விரட்டி யடித்தது.

ஐந்து நாள் கழித்து, கவிராயர் தஞ்சைக்கு வந்தார். எங்கும் அமைதி, எங்கும் வெற்றி முழக்கம். துளஸி மன்னர் பட்டாபிஷேகத்தைப் பாடச்சொல்லி, ஏராளமான சன்மானம் கொடுத்து, "ஸ்ரீராமநாமமும், ஹனுமத் பிரபாவமும் தங்கள் வாக்கிலிருந்து போரை வென்றது" என்று உபசாரஞ் சொல்லிப் பல்லக்கில் புலவரை அனுப்பினுர். இதைக்கேட்ட ஆனந்தரங்கம் பிள்ளை, கவிராயரைப் புதுச்சேரிக்கு வரவழைத்துப் பட்டாபிஷேகம் வரையில் கேட்டுச் சன்மானம் செய்தார்; மணலி முத்துக் கிருஷ்ண முதலியாரிடம் அரங்கேற்றி ஏராளமான செல்வம் பெறச் செய்தார்.

தியாக—தீக்ஷித—சாஸ்திரியார்கள் பிறக்க வெகு காலத்திற்கு முன்பே இப்படித் தமிழிசை திக்விஜயம் செய்தது. அருணாசலக் கவிராயர் 67 வயது வரையில் கீர்த்தனப் பிரசாரமே செய்து, ஒரு நாள் 'அந்தராம ஸௌந்தரியம்" என்னும் கேதாரகௌள கீர்த்தனம் பாடியபோது, அனுயாசமாகச் சிவனடி சேர்ந்தார். அவர் இராமகதை செய்தும், விபூதி ருத்ராக்ஷங்களுடன் தூய சைவராகவே வாழ்ந்தார். "பாய்ந்தானே ஹனுமானை" இக்காலத் தமிழ் மக்களும் மறக்காமல், தேச முன்னேற்றப் பணியில் பாயுங்கள்!

---

# உ. இராம நாடகச் சுவை

---

## 1. இராம நாடக ரசனை

அருணாசலக் கவிராயர் அருளிய இராம நாடகம், கேட்கக் கேட்க இன்பக்கிளர்ச்சி யளிக்கும் நல்லிசை யமுதமாகும்: எளிய சொற்கள், தெளிந்த கருத்து, நவரசக் கற்பனை, பொருத்தமான பழமொழிகள், உபமானங்கள், உணர்ச்சி ததும்பும் காட்சிப்படலங்கள்—இவை இராம நாடகத்தை நம் எதிரே விளக்கி விளையாடச் செய்கின்றன. இந்நாடகம், கதைத் தொடர்ச்சியை விருத்தங்களாகவும், காட்சிப் படலங்களைக் கீர்த்தனைகளாகவும், வர்ணனைகளையும் சம்பாஷணைகளையும் திபதைகளாகவும் சொல்லுகிறது. கீர்த்தனங்கள் பெரும்பாலும் சாவேரி, அசாவேரி, தோடி, மோகனம், சங்கராபரணம், காம்போதி, எதுகுல காம்போதி, காமாஸ், சுருட்டி, செஞ்சுருட்டி, முகாரி, பைரவி, உசேனி, ஆகிரி, கல்யாணி, பந்துவராளி, புன்னாக வராளி, மத்தியமாவதி, ஸ்ரீ, சௌராஷ்டிரம், ஆரபி, துஜாவந்தி, கௌளிபந்து, கண்டா முதலிய இனிய ராகங்களில் ஆதி, அடதாளம், சாபு, ரூபகம் ஆகிய தாளங்களோடு அமைந்தன. சொற்களும் கருத்துக்களும், காட்சிகளும், ரஸவுணர்ச்சியும் ஒன்றையொன்று துரத்திப் பிடிக்கின்றன. கம்பனைப்போலவே கவிராயர் வாக்கிலும் வீரச்சுவை விறுவிறுப்பாக நடக்கிறது. அதிலும் அவரது வழிபடு கடவுளான அனுமாரைப்பற்றிய பாடல்கள் இசைப்புயலாகப் பறந்தடிக்கின்றன. போர்க் காட்சிகளை இவரைப் போல் வருணித்த இசைக்கவி வேறில்லை என்னலாம்.

## 2. நடை வேகம்

கவிராயர் நடைவேகத்தைப் பாருங்கள் :

(1). இராமாயணச் சுருக்கத்தைத் தடதட வென்று சொல்லும் "எனக்குன் இருபதம்" என்ற கீர்த்தனம்.

" நடக்கையிலே அக லிகைக்குக்
 கிருபை செய்து
நடத்திச் சனகன் வில்—
 ஒடித்துச் சனகிகைப்
பிடித்துப் பரசுரா—
 மனுக்கு மமதையைப்
பிரித்து நகரில் வந்
 திருக்கும் அய்யனே !—

எனக்குன் இருபதம் நினைக்க வரமருள்வாய் !"

(2). "அன்னை சானகி வந்தாளே" என்ற சாவேரிக் கீர்த்தனை ; சீதை சபாமண்டபத்திற்கு வரும் வருணனை :

" சுந்தரப் பாதம் வைக்கவே—ரத்தினச் சிலம்பின்
 சோதி நிலத்தில் மொய்க்கவே—பூமியாகிய
தன்தாய் மகளுக் கென்னவே—விரித்ததே மாந்
 தளிர்ப்போல் எங்கெங்கு மின்னவே !
அந்த அமுர்தங் கண்ட—இந்திரன்போலே தாகம்
 ஆகிய ராமன் முன்னே—தோகையர் நடுவாக
கந்தமலர்க் கைவளைச்—சோதியினலே ரண்டு
 கடைக்கண்கள் கொண்டு ராமன்—
 வடிவங்கள் கண்டு கொண்டு
அன்னை சானகி வந்தாளே—ராசாதிராசர்
 அனைவர்க்குங் காட்சி தந்தாளே !"

(3). சீதாதேவி இராவணனை இடித்துரைத்தல்; "ராட்சதப் பதரே" என்ற மோகனக் கீர்த்தனம் :

"வளர்த்திய வார்த்தைகள் படியாதே—தணல்
ஒளிக்கமுன் ருணையில் முடியாதே—என்னை
இளக்கார மாக் கிட்டத் துடியாதே—எரி
விளக்கினிற் பூச்சிபோல் மடியாதே!"

(4). "கண்டேன், கண்டேன், கண்டேன் சீதையை!" என்று மாருதி இராகவனுக்கு உரைப்பது முகாரி ராகம்:

"காவி விழிகளில் உன்உரு வெளி மின்ன
கனிவாய் தனிலேஉன் திருநாமமே பன்ன
ஆவித்துணையைப் பிரிந்த மட அன்னம்
ஆனல்நான் சொல்லுவ தென்ன?
பூவைத் திரிசடை நித்தநித்தஞ் சொன்ன
பத்தி வழியேதன் புத்திநிலே மன்னப்
பாவி அரக்கியர் காவற்சிறை துன்னப்
பஞ்சு படிந்த பழம்சித்திரம் என்னக்
கண்டேன் கண்டேன் சீதையை!"

(5). "இந்தா விபீஷண—லங்காபுரி ராச்சியம்!" என்ற பரசுராகக் கீர்த்தனை. இராமர், விபீஷணருக்கு அபயமும், அரசுங்கொடுத்தல்:

"வேதம் உள்ளளவும்—வேத
கீதம் உள்ளளவும்—பாரி
சாதம் உள்ளளவும்—பஞ்ச
பூதம் உள்ளளவும்,......
கார் உள்ளளவும்—கடல்
நீர் உள்ளளவும்—ஈரேழ்
பார் உள்ளளவும்—எந்தன்
பேர் உள்ளளவும்
தந்தேன், தந்தேன், தந்தேன்!......"

## 3. போர் நடை

இனி, போர்ச் சித்திரங்கள் சில காண்போம்: "அடித் தானே அசோகவனந் தன்னை, முடித்தானே அனு மான்" என்னும் பியாகடை ராகக் கீர்த்தனை; அனுமார் அசோகவனம் அழித்தல்:

(1). "ஆடச்செயும், அசையச் சேயும்
அறுந்தன சிலமரங்கள்—கைகளை
மூடச்சேயும், முறுக்கச் சேயும்
முறிந்தன சிலமரங்கள்—வேர்பிடுங்கிச்
சாடச்சேயும் தாவச் சேயும்
தறிந்தன சிலமரங்கள்—கொண்டாட்டம்
பாடச்சேயும் பாயச்சேயும்
பறிந்தன சிலமரங்கள்—"

(2). "அனுமந்தன் அடித்தானே — இந்திரசித்தன் மனம் நொந்து துடித்தானே" என்ற மத்தியமாவதி ராகப் பாட்டு; அனுமார் இந்திரசித்தனுடன் பொருதல்:

" முட்டிவருந் தேரையும்
கிட்டிவருந் தேரையும்
முடுகி வருந் தேரையும்
கடுகி வருந் தேரையும்
முன்கையால் வாரித் தூக்கினன்—தரையில் மோதிச்
செங்கற் பொடிபோல் ஆக்கினன்!-ஆனைப்படையை,
மொத்தியும் குத்தியும் வாலால்—
சுற்றியும் எற்றியும் வாரி
மூட்டைப் பூச்சிபோல் மடித்துக்
கூட்டம் கூட்டமாய் அடித்து
முட்டு முட்டா அடுக்கினன்—கோட்டையும் லங்கைப்
பட்டணமும் நடுக்கினன்—அந்நகர் வீதி

முகப்பும் கோபுரங்களும்
வகுப்பும் தாவரங்களும்
முத்து மாடங்களுந் தேய்ந்து
சித்திர கூடங்களும் சாய்ந்து
முடியவீசி நொறுக்கினன்—கோடைகாலத்தில்
இடிபோலே உறுக்கினன்!"

## 4. வீர முழக்கம்

இராவணன், சீதையை எண்ணித் துடித்து மனம் வாடிச் சிங்காதனத்தில் வீற்றிருக்கிறான். இந்திரசித்து நாகபாசத்தால் அனுமானைக் கட்டிக் கொண்டுவருகிறான். இராவணன், "ஆரடா குரங்கே நீ? உன்னை அடிக்கவோ, பல்லால் கடிக்கவோ, ரத்தம் குடிக்கவோ... சொல்லடா?" என்று இறுமாக்கிறான். அனுமான், அதே "அடா" போட்டு வீறுகிறான்! இதை மோகனராகத்தில் பாடிப்பாருங்கள்:

(1). "ராமசாமி தூதன் நானடா! அடா, அடடா ராவணா!
நானடா!—என்பேர்—அனுமானடா!

* * *

கொடுத்த வரமுந் தனமுங் கனமும்
வீணிலே ஏன் போக்கிறாய்?
குடிக்கும் பாலை ஐயையோ கமர்
வெடிக்குளே ஏன் வார்க்கிறாய்?
துடுக்குடன் பரஸ்திரீ சனங்களைத்
தொடர்ந்தேன் பழி ஏற்கிறாய்?
தூக்கி ஏறவிட் டேணியை வாங்கும்
துர்த்தர் வார்த்தையைக் கேட்கிறாய்;
தடைப்படாமல் என் ஐயன் கால்மீதே
சரண் என்றால் பிழைப்பா யிப்போதே!"

(2). "குத்துக்கு வாடா-ராவணா, கைக்-குத்துக்கு நீ வாடா" என்னும் மத்தியமாவதிராகக் கீர்த்தனை; அனு

மான் இராவணனைக் குத்தல். இதில் வீரத்துடன் நகைச் சுவை கலந்து வருகிறது :

“ எட்டானைக் கொம்பும்
மொட்டைக் கிடாப்போலே
ஒட்ட ஒடித்தேன் என்றும்—அந்த
ஈசன் கயிலையை ஊசிவே ரோடுநான்
எடுத்துப் பிடித்தேன்—என்றும்
சட்டம் சட்டமாய்ப் பேசிக் கொள்ளுவதும்
சமர்த்தன் சமர்த்தன் என்று துள்ளுவதும்
விட்டுக் கட்டடா ; ஏதுக்கு வீணும் சாணும்
வீரம் எல்லாம் இன்றைக்கு வெளிச்சம் ஆகவேணும்
ஒதிபெருத்தால் என்ன
தூணாகுமோ ?—சற்றும்
ஒதுங்காதே நில்லடா—கையை
ஓங்கினேன், குத்து வருகுது—
தாங்க உன்வசம் அல்லடா ! ”......

(3) வீரப் பெண்மையின் கற்புக்கனல் வீறிடுவதைக் கேட்போம். கும்பகர்ணன் மடிந்தபிறகும் இராவணன் உணர்வு கெட்டுச் சீதையைக் கெஞ்சுகிறான் ; சீதை இடித் துரைக்கிறாள் : “ கெட்டுப்போக வேணுமோ ?—கேளடா அட ராவணத் துரும்பே நீ ” என்னும் சகானா ராகக் கீர்த்தனை :

“ ஆக்கிரமச் சிங்கத்தைப்
பார்க்கிற பெண் சிங்கம்
சாக்கடைக்குள் நரிக்குட்டி—தன்னைப்
பார்க்குமோ கண்ணாலே எட்டி
ஏண்டா மட்டி ”

## 5. மூலபலச் சண்டை

“ மூலபலச் சண்டையைக் கேளும் ” என்ற பந்து வராளி ராகப் பாட்டு, மூலபலச்சண்டை நமது கண் முன் நடப்பதுபோலவே சித்திரித்துக் காட்டுகிறது. இந்

நூலில் அதுவே மிகப்பெரிய பாட்டு; முற்காலப் போர் முறைகள், ஆயுதங்கள், அணிவகுப்புகள், போரின் பயங் கரக்காட்சிகள் எல்லாம் அதில் அடங்கியுள்ளன :

(1) " அடர்ந்து மலையுங் குன்றும்
இடர்ந்து, நாலு திக்கிலும்
படர்ந்து, ராகவன்முன்னே
தொடர்ந்து தொடர்ந்து" வருகிறது!

எட்டியும் கிட்டியும், ஈண்டியும் தாண்டியும், சீறியும் இரைந்தும் விரைந்தும், இடத்திலும் வலத்திலும் எடுக்க முடுக்க, இடி இடி, பிடி பிடி, எற்று, குத்து, எட்டு, வெட்டு, எதிர், மிதி என்று அரக்கர் வருகின்றனர். நீண்ட போர் நடக்கிறது. தோள்கள், தாள்கள், தொடைகள் இடைகள், தொந்திகள், சந்துகள், துணைக்கைகள், கணைக் கால்கள், தொண்டைகள், மண்டைகள் எல்லாம் கண்ட துண்டமாகின்றன. தூணிகள் இழந்து நாணிகள் இழந்து துரகம் உலைந்து, இரதம் கலைந்து, தோரணங்கள் கெட்டு வாரணங்கள் விட்டு, தோமரம் பறிந்து சாமரம் எறிந்து,

" தொட்டெடுத்து வாள்கெட்டு
நட்டகட்டை போல்பட்டுத்
துள்ளித் துள்ளி நெளிப்பாரும்—பிணங்கள் தம்மேல்
தள்ளித் தள்ளி ஒளிப்பாரும்,

தொலையா அம்புகளாலே—
தலைபோய்ப் பம்பரம்போலே
சுற்றிச் சுற்றி மடிவாரும்—முண்டங்களாகித்
தத்தித் தத்திப் படிவாரும்—நிலைகலங்கித்

தோளென்றும் தாளென்றும்
வாளென்றும் அடையாளம்
தோற்றாமல் கெட்டபேரும்—காயங்களாலே
ஆற்றாமல்— பட்டபேரும்"

இப்படியாக மூலபல அரக்கர் கோதண்டத்திற்கு இரையாகின்றனர். கவிராயரின் நடைவேகத்தை அறிய இந்த ஒரு பாட்டே போதும்!

(2). இராமனுக்கும் இராவணனுக்கும் நடந்த இறுதிப்போரை வருணிக்கும் தோடிராகத் தரு, வீறுமிக்க வீரச்சித்திரக் காட்சியாகும் :

“ அரக்கன் ராவணன் சிலசில கணை எய்தான் ;
அதைக் கண்ட ராமன்—தவிடுபொடிகள் செய்தான் !
அரக்கன் தேரை ஆகாசத்திற் போக்கினன் ;
அதுக்கும் சாமிதேர் மேலாகத் தூக்கினன் !
வடதிசை முதல் நாலுதிசையும் போவார் ;
கடலிலும் போவார் ; கடலப்புறமும் போவார் ;
சரமும் விடவிட படையும் பொடிபட
சகல ரதகச தளமும் அடிபட ”

இவ்வாறு புரியும் போர், தற்காலத்தில் ஆவிக்கப்பல்களையும் விமானங்களையும் பீரங்கிகளையும் கொண்டு செய்யும் போர்போல் அமர்க்களப்படுகிறது! இப்போரில் அரக்கன் தனது பத்து மணிமுடியும் தத்தி விழுந்து இறக்கிறான்.

## 6. திபதைகள்

கவிராயர் உருக்கமான சம்பாஷணைகளுக்கும் சோக-கருணரச வருணனைகளுக்கும், திபதை, (துவிபதை)களைக் கையாளுகிறார். ஒவ்வொரு திபதையும், கதையின் ஒரு முக்கியப்பகுதியில் அமைந்துள்ளது. திபதைகளில் இனிமையான பழமொழிகளும் நீதிகளும் காணலாம்; சில உதாரணங்களை அறிவோம் :

(1). இராமர் மிதிலை வீதியில் பவனிவரும் காட்சியை ஊரார் காணல்; இதைக் கௌளிபந்து ராகத்தில் பாடிப் பாருங்கள் :

"ஆடக லோகத் தமுதை
ஈக்கள் மொய்த்துக் கொண்டதுபோல்
ஐயனை மொய்த்துக்கொண்டார்--வெகுமாதர்!
கோடை தனிலே தண்ணீர்
ஓடைகண்ட மான்கள்போலக்
கூடிக்கொண் டோடி வந்தார்—வெகுமாதர் !"

(2). கைகேசி தசரதனிடம் இரண்டு வரங்கேட்டு வாதாடும் திபதைகளில் கைகேசி மெல்லமெல்ல அரசனை வசப்படுத்தும் சாகசப்படிகள், சிறந்த ரசனைச் சித்திர மாகும்:

"மருவும் மலரும், பாலும் நீரும்போல என்னை மனம் வைத்தாண்டீரே, கருவிழிமணிபோலக் கரிசனமாக என்னைக் காத்தீரே, மன்னவரே!" என்கிறாள் கைகேயி. "சரி, காத்ததற்கு என்ன குறை? இப்போது என்ன, உன்னைக் கைநழுவ விட்டேனா? என்ன வேண்டுமோ கேள், தருகிறேன்" என்று தசரதன் சிக்கிக்கொள்கிறான். "முன்னே நீர் கொடுத்த இரண்டு வரமே வேண்டும்" என்று அடிப் போடுகிறாள் பெண். "அட்டியில்லை, தந்தேன்!" என்று பிடி தருகிறான் தசரதன். "பரதன் நாடாளவும், இராமன் காடாளவும் இரண்டு வரம்" என்றதுமே தசரதன், "இந்த வஞ்சனையால் உன் மனதைக் கலைத்ததார்? யானை போல் இராமன் மூத்தவன் இருக்கும்போது, பூனைபோலப் பரதனோ முடிபுனைவது?" என்று திகைத்துரைக்கிறான்!

"ஆனையும் பூனையும் நீர்பெற்ற பிள்ளை யல்லால்
அசலார் பெற்ற பிள்ளையோ?—மன்னவரே
மனம் வைத்தாற் போதும் அணுவும் மலையாம்—அவ்
வகையை நான் அறியேனோ?—மன்னவரே !"

என்று தீட்டுகிறாள் கைகேசி. தசரதன் அவள் காலில் விழுந்து, இராமனைக் காட்டிற்கனுப்பாதிருக்க வேண்டு

கிறான். "ஈரச்சேலை போட்டு என் கழுத்தறுக்கலாமோ? மின்னரசே!" என்கிறான் தசரதன் :

" வீட்டுப் பெண்சாதிக்காக இத்தனை சாகசமும்
வேணுமோ ? போதும் போதும் மன்னவரே !"

என்கிறாள், கைகேசி.

" கட்டியதாலிக் கயிற்றை உன்மகற்குப் பட்டங்கட்டக்
காப்புக் கட்டடி கைகேசி சண்டாளி "

என்று தசரதன் மயங்கித் துடிக்கிறான். இராமனை நினைத்துப் புலம்பித் தசரதன் உயிர்விடும் கண்ணிகள், சோகச் சித்திரமாக மிளிர்கின்றன:

" முடிக்கு மகுடஞ்சூட்டி முகம்பார்க்க இருந்தேனே,
மோசம் கைகேசி செய்தாள்—ரகுராமா—ராமா !
உடுத்த புடவைதானே பாம்பாய்க் கடிக்குமென்னும்
உளவறியாமற் போனேனே—ரகுராமா—ராமா !"

* * *

வேலிக்கு முள்இடவே என் காலுக்குமுள் ளாகவந்து
விளைந்ததென் விதிவசம்—ரகுராமா—ராமா !"

(3) பரதன், ஸ்ரீராமர் முன்னே புலம்பல் :

" உறவுபோலே யிருந்து குளவிபோலே கொட்டி
உன்னையும் போகச் சொன்னாளே—படுபாவி

* * *

மலைதாங்கும் பாரத்தை மலையே தாங்கவேணும்
மண்ணாங்கட்டி என்ன—தாங்குமோ ?"

(4) சூர்ப்பணகைக்கும் இராமனுக்கும் சம்வாதம் நடக்கிறது :

இராமன் : " ஆசை வில்லின் மேலோ
மரவுரி மேலோ—தின்னும்
அதரக்கனி மேலோ சொல் ?—பெண்பாவாய் ?

சூர்ப்பணகை : "ஆசை வில்லின்மேல் இல்லை ;
மரவுரிமேல் இல்லை—உன்
அதரக்கனிமேல் உண்டு—என்கோவே !"

(5) திரிசடையுடன் சீதை புலம்பும் கண்ணிகள் மிக்க உருக்கமானவை ; பெண்ணுள்ளத்தை அவை படம் பிடித்துக்காட்டுகின்றன ; இவற்றை, நீலாம்புரி ராகத்தில் பாடிப் பாருங்கள் !

"ஐயோ நானொரு பெண்பிறந்த கதையை
ஆருடனே சொல்லுவேன்—திரிசடையே !
* * *
மங்கைமார் கொண்ட கணவனைப் பிரிந்தால்,
மனையிலும் இருப்பரோ ?—திரிசடையே !
துணையாகவே வைத்த கொழுந்தனை, அவர்பின்னே
தூரப்போகச் சொன்னேனே—திரிசடையே !
கணவனார் 'மெத்தநீலி இவள்' என்றென்னைக்
கைநழுவ விட்டாரோ ?—திரிசடையே !"

(6) இராவணன் இறந்ததற்காக விபீஷணன் புலம்புகிறான் ; இதை ஆகிரி ராகத்தில் பாடிப் பாருங்கள் :

"உண்டாற் கொல்லும் விஷம்
உலகத்தில் எங்கெங்கும்
உண்டே ;—அண்ணலே, சீதையென்று
கண்டாற் கொல்லும் விஷம்
உன்னிடத்திலே மாத்திரம்
கண்டேன்—அண்ணலே !"

## 7. கம்பனும், கவிராயரும்

இராம நாடகம், கம்பன் கருத்தின் இசைச் சித்திரமே ! கம்பன் கருத்துக்கள் இந்நாடகத்தின் ஒவ்வொரு பாட்டிலும் உள்ளன. சில உதாரணங்களைத் தருவோம் :

(1) குகன், பரதன் சேனையைக்கண்டு, "என்னத்துக்குப் பரதன் படை வந்தது?" என்றெழுகிறான்.

" ஆழநெடுந் திரைக் கங்கை ஆறுகடந்தாலும் என்ன
'தோழன்' என்று ராமன் என்னைச் சொல்லியருளியதொரு
சொல்லேனோ?— சொன்னபடிக்கு
நில்லேனோ?— நான்பிடித்தகை
வில்லேனோ?— இவரைக்
கொல்லேனோ?" ......

கம்பனின் குகன், வேடர் படையுடன் பரதனை எதிர்க்க நிற்கும்போது, இதே கருத்தைச் சொல்லுகிறான், காண்க:

" ஆழ நெடுந் திரை யாறு கடந்திவர் போவாரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ?
ஏழைமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ?"

(குகப் படலம்)

(2) அனுமான் தந்த கணையாழியை வாங்கிச் சீதை இன்புற்றதைக் கம்பன், பசித்தவர் எய்திய அமுது போலும், இழந்த மணியைப்பெற்ற நாகம்போலும், குழந்தையை உயிர்த்த மலடி போலும், கண்பெற்ற குருடன் போலும் மகிழ்ந்ததாக வருணிக்கிறான்:

" இழந்தமணி புற்றரவு எதிர்ந்ததென லானாள்,
பழந்தனம் இழந்தன படைத்தவரை யொத்தாள்,
குழந்தையை யுயிர்த்தமல டிக்(கு)உவமை கொண்டாள்,
உழந்துவிழி பெற்றதொரு உயிர்ப்பொறையு மொத்தாள்!"

(உருக்காட்டுப் படலம்)

கவிராயர்,

" எரிந்தபசியால் வருந்தும், நாகம்முன்
இழந்தமணிதன்னை அடுத்தாற்போல்
ஏதினிமேல் வாராதென் ருெழிந்தவர்
எறிந்த உடைமையைக் கண்டெடுத்தாற்போல்
பெருந்தரையில் ஒருகால்மேலே நின்று
பிள்ளைபெற்ற மலடி படுத்தாற்போல்
பின்னுமுன்னுந் தோன்ருமல் தவிக்கிற
பிறவிக்குருடனுக்குத் தெய்வம் கண்கொடுத்தாற்
போல்"

என்று அதே உவமை நயத்துடன் இசைக்கிருர்!

(3) கம்பனில் அங்கதன் தூதுப் படலத்தில் இராவணன், "உனக்கு அரசு தருகிறேன்; என் மகன்போல் உன்னைப் பேணுகிறேன்; என் பக்கம் இரு" என்று தலையைத் தடவுகிருன். அங்கதன், "உன் இலங்கை நாளையே அழியப்போகிறது; நீ தந்து, நான் அரசு கொள்வ்தா? நாய்தரக் கொள்ளுஞ்சியம் நல்லரசு என்று நக்கான்!"

அதையே கவிராயர்,

" அரசும் உன்கொலுத்திருச் சட்டமும்—நாளை
அழியப்போகுதே, உன்றன் கொட்டமும்—இதிலே
தருவேன் என்ருய் எனக்கிட்டமும்—நாய்
தரக்கொள்ளுமோ சிங்கம் பட்டமும்"—என்கிருர்.

(4) கம்பன், வெண்ணெயூர்ச் சடையப்பன் மரபினர் மகுடந்தர, வசிட்டன் அதை இராமருக்குச் சூட்டியதாக நன்றியுடன் பாடுகிருன். கவிராயரும்,

"மாட்சி பெறும் சடையன்
மரபோர் கொடுக்க வாங்கி
மணிமகுடத்தை ஞான
வசிஷ்டன் தரிக்கத் தாங்கிக்
காட்சியுடனே ராமன்—தாழ்ச்சியில்லாமல்—அர
சாட்சி செய்திருந்தானே!" என்று பாடுகிறுர்.

நாமும் கலேக்கவி கம்பனுக்கும், இசைக்கவி அருணு சலருக்கும் அன்பு முடிசூட்டி, இந்நூலே முடிப்போம். கவியும், இசையும், கலேயும் வாழ்க!

முற்றிற்று.

